# மழைக் காளான்கள்



அரிதாரம் பூசி அசிங்கம் மறைத்து,
ஆரவாரமாய் முள்ளிவாய்க்காலைக் கும்பிட்டு
சலங்கை கட்டி, கட்டியம் ஒலிக்க-கூத்து
மேடைகளில் ஆட வந்த கழைக் கூத்தாடிகள்



தமிழ் தேசியம் பேசிடும் வேசிமக்கள் தேர்தல்
காலத்தில் மழைக்கு முளைக்கும் நச்சுக் காளான்கள்,
வெளிநாட்டுப் பணமுதலைகளுக்கு தம்மை விற்ற
கூலிகள், தமிழ் தேசியக் கூத்தாடும் போலிகள்

மத்தியில் ஒற்றையாட்சி, மாநிலத்தில் சுய ஆட்சி
ஒற்றுமையின்றித் தமக்குள் போராடும் திருடர்கள்
தமிழர் வாக்குகளைச் சிதறடிக்கும்
கட்டப்பொம்மன் வேடம் தாங்கிய எட்டப்பர்கள்



தமிழ் ஈழ விடுதலைப் புலிகளின் வீழ்ச்சிக்குப் பின்னர்,
ஆட்சிக்கு வந்த பேரினவாதிகளோடு பேரம் பேசி
மதுபானச்சாலை, எரிபொருள் நிலையம் உரிமங்களை
வடகிழக்கில் விற்றுப் பிழைக்கும் பேமானிகள்



தமிழர் பிரதிநிதிகளாய் வெள்ளை வேட்டிக் கலாச்சாரம்
விற்றுப் பிழைக்க தமிழ் தேசியமோ உபயம்
பாராளுமன்றப் பிரதிநிதித்துவச் சலுகைகளில்
சொகுசு வாகனம், ஆடம்பர பங்களா வாழ்க்கை

தூர் வாராத வாவி, தூர்ந்துபோன வடிகான்கள்
குப்பை நிறைந்து நாறிக் கிடக்கும் தெருக்கள்
அபிவிருத்தி காணாத தமிழ் பிரதேசங்கள்
நகரசபை ஆட்சி அதிகாரமோ தமிழர் வசம்



புலிகளால் ஓரம் கட்டப்பட்ட பேடிகள்
இன்று புலி வேஷம் போட்டு, தமிழனை விற்றுப்
பிழைக்கும் கேடிகள், திருடித் தேடிய சொத்தோ
மலையளவு, கொள்கையோ அணுவளவு?



சங்கு, வீணை, வீடு, படகு, சூரியன் தாங்கிய
பல கட்சிகள், அதிகபட்சம் ஐந்து ஆசனம்-
பேரம் பேச வேண்டிய இலட்சணம்- மேடைகளில்
ஓயாத அரசியல்வாதிகளின் பிலாக்கணம்

தந்தி அறுந்த வீணையில் நாதமில்லை
உடைந்த சங்கில் முழக்கமில்லை
ஓட்டைப் படகால் கரைசேர முடியாது
பாழடைந்த வீட்டில் குடியிருக்க முடியாது



காற்றுப்போன துவிச்சக்கர வண்டி, கறையான்
அரித்த உழவாரம், என்றோ அஸ்தமித்த சூரியன்,
சேவல் கூவி விடியாத உலகம், அரசியலோ
விபச்சாரம், தமிழ் தேசியம் மாயப் பிரசாரம்

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு-நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வு
இன்றும் பொய்க்காத பாரதியின் கீதம்
பல்லவ, சேர, சோழ,பாண்டியனாய் தம்முள்
போரிட்டழிந்த தமிழன் சரித்திரம்

முள்ளிவாய்கால் முற்றத்தில்-இன்றும் அல்லல் படும் தமிழன்,
தமிழ் தேசியம் பேசி ஏமாற்றும் அரசியல்வாதிகளோ கபடர்
கட்டப்பொம்மன் வேஷம், மனதில் எட்டப்பனின் மாறாத தோஷம்
விழித்தெழு தழிழா! விழித்தெழு!




இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
எல்லாப் புகழும் இறைவனுக்கே
Pax Ravichandra-29-10-2024

# நன்றி சொல்ல வார்த்தை இல்லை

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -






கண்ணனே, குசேலன் வீட்டுக்கு வந்ததென்ன
மனைவி, மகளோடு சொந்தம் சொன்னதென்ன?
நண்பா நீ என் உறவு என்றே ஏழை என்னை
விருந்தோம்பி மகிழ்வித்த கருணைதான் என்னே!

என் தேவையை அறிந்த தெய்வம்
உன் வழியாய் என்னை ஆசீர்வதித்ததென்ன
உன் தேவியும், மகளும் என்னை
தம் உறவென்றே வாழ்த்தி மகிழ்ந்ததென்ன

தாயன்பை உன் தேவியிடம் கண்டேன்
சேயன்பை உன் மகளிடம் பெற்றேன்
தந்தை, தாய் மகளாய் உன் உறவு
இறைமகனே என் சொந்தமான வரவு





மனிதம் வாழ உன் மகத்தான சேவை-மனதில்
புனிதனாய் உன்னைக் கண்ட பெருமை
ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணும்
உன்தன் உள்ளம், இறை வாழும் இல்லம் ஐயா

அன்னையாய் உன் தேவியின் அன்பு
அநாதை எனக்கோ தேன்கரும்பு-பிறர்
துயர் துடைக்கும் உங்கள் மகத்தான பண்பு
உங்களில் இறைமகனைக் காணும் அரிய வாய்ப்பு



உன் கருணை மழையில் என் ஆனந்தம்
உன் அன்பு வெள்ளத்தில் என் பேரின்பம்
நான் தேடும் அமைதி-இறை சந்நிதி-நீயோ
நண்பின் வடிவில் இறை தந்த குபேரநிதி

அமைதி உலாவும் இல்லத்தில்-ஆனந்தக்
குயில்களின் இன்னிசையோ ஹிந்தோளம்
தனியனாய் உலாவிடும் வீட்டில்
உன் காலடி பட்ட புனிதமோ பூபாளம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-10-11-2024*

# புதிய விடியல்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -






இனவாதம் பேசி ஆட்சியைக் கைப்பற்றிய பேரினவாதி,
குடும்ப ஆட்சி நிலைக்க- ஈழத்தை ஆண்ட காலம்,
இருளும் ஒளியுமான யுகம், ஊழல் மலிந்து,
நாடு அல்லாட நிலைத்த இருண்ட யுகம்.

பாதாள கோஷ்டி, போதை வஸ்து, கொலை,
வெள்ளை வான் ஆட்கடத்தலால் நாடெங்கும் பீதி
உண்மைக்கு குரல் கொடுத்த ஊடகவியலாளர்கள்
மர்மாய் மடிந்திட, மௌனித்த நீதி.

எதிர்ப்போரை வீழ்த்துவதும், தம்மைத் தொழுவோரை
வாழ்த்துவதும், ஏழையர் வாக்குகளை வியாபாரமாக்கி
அரியணை ஏறுவதும் மாட்சி, குடும்ப ஆட்சி நிலைக்க,
ஜனநாயகத்தின் வீழ்ச்சி, அதர்மத்தின் ஆட்சி

நல்லாட்சி அரசில் சஹ்ரானின் எழுச்சி
அப்பாவிகள் மடிய வெடிகுண்டுகளின் சூழ்ச்சி
சட்டம், ஒழுங்கின் அசமந்த நிலைமை, மடிந்த
உறவுகளோ மாலை சூடிப் படமான கொடுமை



கேடிகள் ஆள, திறைசேரியில் பல்லாயிரம்
கோடிகள் மறைய, நாடோ வறுமைக்கு அடிமை
சொகுசு வாகனமும், ஆடம்பர வாழ்க்கையும்
அரசியல் வரப்பிரசாதமான் இழிநிலைமை

ஏழை எளியவருக்கு கிட்டாத மும்மணிகளின் ஆசி,
கேடிகளுக்கு கிட்டிட பரிவட்டமும், பிரித்நூலும் கட்டி,
மதவாதம் ஓதும் பிரித் வேடிக்கை,
பௌர்ணமி தினத்தில் காணொளியில் கேலிக்கை

இனவாதம், மதவாததிற்கு எளிதில் பலியாகும்
மக்களோ பலியாடுகள், தலைவர்களோ திருடர்கள்,
சீவர ஆடை கறைபட அரசியல் வேசித்தனம்,
ஈழத்தை இனவாதம் ஆளும் தினம்

நீதியும் நிரந்தரக் குருடி, சட்டம், ஒழுங்கு,
கோலும், குடையும் தாங்கி மகுடம்
சூடிய திருடருக்கு அடிமை-கயிறு அறுந்த
ஆராய்ச்சி மணியாய் நீதியின் பரிதாப நிலைமை

சிந்தித்து மக்கள் மனம் மாறினாலன்றி- நாட்டில்
மாற்றமில்லை, ஊழலற்ற, நேரிய தலைவர்கள்
இனங்களை ஒன்றுபடுத்தினாலன்றி சுபீட்சமில்லை
தேசமே விழித்தெழு!, நாடே ஒன்றுபடு



புதுவிடியல் காண ஒரு யுகம் படைப்போம்
சான்றோனை, கல்விமானை, நேரிய மனத்தோனை
நாம் தெரிவோம், வறுமையால் வாக்கை விற்றகாலம்
மலையேற, புதுமையாய் ஓர் யுகப்புரட்சி செய்வோம்

இனவாதம், மதவாதம் கழித்து
புதிய ஈழத்தவராய் எழுவோம்
ஒன்றுபட்டு நல்லாட்சி அமைத்து
வளமான நாட்டை உருவாக்குவோம்



சட்டம், ஒழுங்கு. நீதியில் மக்கள்
நம்பிக்கை கொள்ள, மாற்றம் வேண்டும்
மனதில் உறுதி வேண்டும்
ஓர் யுகப்புரட்சி வெடிக்கவேண்டும்




தீமையைச் சிறையிலிட்டு நீதி வழங்குவேம்
உண்மையை ஓம்பி நம்பிக்கை செழிக்க
நல்மனங்கள் சிரிக்க, ஒன்றே குலம்
ஒருவனே தேவன் என்றே பாடுவோம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-24-11-2024*

# உக்ரேன் அவலம்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -




கண்ணுக்கெட்டிய தூரம் வரை-மண்ணெங்கும் புதைகுழிகள்
காற்றில் ஆடும் மஞ்சள், நீலம் இணைந்த தேசியக் கொடிகள்
மலர் வளையங்களும், சிலுவைகளும் சோகம் சொல்ல
ஈர விழிகளோடு நொந்தழும் சொந்த பந்தங்கள்



உயிர் கொன்று உடைமையை அழிக்கும்
கோர யுத்தம், அநாதை, விதவை, அகதி,
அங்கவீனர் என புதிய சமூகம் படைக்கும் இரத்தம்
மதம், இனம், மொழி இரும்பு விலங்கான பந்தம்

உலகில் மரண விகிதம் கூடியும்
பிறப்பு விகிதம் குறைந்த நாடுமாய் உக்ரேன்
நாளும் எறிகணைகளால் எரிந்தழிந்திட,
தீ மூட்டும் ரஷ்ய அதிபர் பூட்டின்



அழிவும், அகால மரணங்களும்,
அவல விதவை வாழ்வும் நாளும் நிகழ்வு
அகதி, அங்கவீனராய் மாறிடும்
மக்கள் மனதில் மாறாத பீதியோ உறவு

எறிகணைகளால், ஏவுகணைகளால் நாளும்
எரிந்திடும் தேசம் சுடுகாடாகும், அழுது,
புலம்பும் மனுக்குலத்தை சோகம் மூழ்கடிக்க
வாழ்வு கண்ணீர்க் காடாகும்

மண்ணில் முளைக்கும் சிலுவைகளும், மனதில் தைத்த
சோக வாட்களும் அவலத்தைச் சொல்ல, ஈர விழிகளோடும்
பாரச் சிலுவையோடும் கல்வாரிப் பாதையில் தள்ளாடி
நடைபோடும் அப்பாவி உக்ரேன் மக்கள் புதிய இயேசுக்கள்



வல்லமையைத் தெய்வமாய் வழிபடும் உலகம்
நீதியைப் புறந்தள்ளிட, எரிநரகாய் மாறிடும்
உலகெங்கும் ஓயாத யுத்தம், இரத்தத்தால்
நரபலி செலுத்தும் மனிதனோ பித்தனான அவலம்

பிள்ளையயாய் கண்ட உறவு, கணவனாய்
பூண்ட உறவு, தந்தையாய் மாறிய இன்பக் கனவு
கலைந்திட, போர்க்கோலம் பூண்ட மறவன்
இன்றோ புதைகுழியில் மறைந்த அப்பன்

அன்னையர் சோகம் நெஞ்சைத் தொட
விதவைகள் கண்ணீர் இதயத்தைச் சுட
அப்பா, அப்பா எனக் கதறும் பிள்ளைகள்
அரவணைக்க ஏது தந்தையின் கரங்கள்

மண்டியிடோம், தலை வணங்கோம்
இறைமை மிக்க சுதந்திர நாடு எம் நாடு
உடல் மண்ணிற்கும், உயிர் நாட்டிற்கும்
என்றே மடியும் வரை போராடும் வீரர்

போராடி விழுந்தவர் புதை குழியில் பொக்கிஷமாய்
மறைந்திட-கண்கள் கண்ணீரில் நீராட- நாளும்
போராட்டமான வாழ்வில் நடைப்பிணமாய் மாறிடும்
சொந்த பந்தங்கள் இதயத்தில் ஆறாத ரணங்கள்

அழுதாலும், தொழுதாலும் தீராத சோகம்
ஆண்டவனோ கண் மறைந்த பாவம்
ஓயாத வல்லரசுப் போராட்டங்கள்
பகடைகளாய் அப்பாவி மனித உயிர்கள்

உலகெங்கும் யுத்தம், ஓயாத குண்டுச் சத்தம்
கங்கையாய் சிந்திடும் இரத்தம்,
மனிதனோ மிருகமான அலங்கோலம், மடிந்தும்
மைவிழிகளுக்குள் மறையாத கணவனின் ரூபம்

அன்று அவள் புது மனைவி
நேற்றோ தாய், இன்றோ விதவை
நாளை என்று ஒன்றிருந்தால்
நாதியற்ற பெண்மைக்கு வாழ்வே சுமை

மணவாழ்வு தந்த இன்பமோ கலைந்த கனவான பொழுது
மடிந்த கணவன் பிரிவுத் துயரமோ வாழ்நாள் முழுதும்
கலைந்த வண்ணக் கனவு, வாழ்வோ மாயை என்றான
நிகழ்வு, கண்ணீர் சிந்திடும் செவ்விழிகள்-நெஞ்சுக்குள்
பொங்கிப் பாயும் செந்நீரில் சோகச் சுனாமி அலைகள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23-11-2024*

# வசந்த காலத்தை நோக்கி





அடிமை நுகம் இரும்பாய்க் கழுத்தை இறுக்கிட
ஆண்ட பரம்பரையை அடிமையாக்கி கொடுமை செய்யும்
சிங்களப் பேரினவாத அரசு, அடிமைத் தளையை
உடைத்தெறிந்து ஆண்ட பரம்பரை மீண்டும் அரியணை
அமர்ந்திட, ஈழத்தமிழன் கொட்டிடும் போர்முரசு

எமக்கென நாம் உரிமை கொண்டாடத் தாய் நாடொன்றில்லை,-
தஞ்சமளித்து நெஞ்சம் மகிழ்விக்க தாயோ, தந்தையோ
கூட வேறெந்தச் சொந்தமுமில்லை, எம்மைக் காத்திட
எந்தக் கடவுளுமில்லை, நாம் அநாதைகளானோம்-நித்தம்
நெஞ்சில் செந்நீர் சிந்தியழும் வேதனை நிலைகளுமானோம்

நீட்டி நிமிர்ந்து உறங்கிய நாட்களும்,
உண்டு சுவைத்து சொந்தம் கூட்டிய பொழுதுகளும்
கனவுகளாய் கழிந்து போனதற்கு-இன்று
இடிந்த இல்லங்களும், மடிந்த சொந்தங்களும்
சாட்சிகளான இருண்ட காலமிது

விடிவேயில்லாத இருளில்-மின்னலாய்
விடுதலைப் போரின் தொடக்கங்களுமிங்கே.
ஆயுதக்கலாச்சாரத்தால் அகிம்சைச் சூரியன்களின்
திடீர் அஸ்தமனங்களுமிங்கே.



ஆயுதப்போராட்டம் கீதா உபதேசமாக
பஞ்ச சீலமும்-பத்து கட்டளைகளும் பழம் வேதங்களாக
யுத்தப் பாதையெங்கும் இரத்தச் சுவடுகள்
ஓயாது முழங்கும் யுத்தப் பேரிகைகள்

தேச ஒற்றுமையைச் சீர்குலைத்த பேரினவாதம்
சீவர ஆடையைச் சிவப்பாக்கிட-தமிழ்
இரத்தம் கேட்கும் பௌத்த மதவாதம்
தொடரும் யுத்தம், ஓயாத ஒப்பாரியின் சத்தம்

விம்மலும், ஒப்பாரியும், விழிநீர் கங்கையும்
பெருவெள்ளமாய் வாட்டிட-வாழிடங்களை
எறிகணைகளும், பீரங்கிகளும் தீக்கிரையாக்கிட
விழிகளிலே கங்கை, இதயத்திலே காங்கை



காணாமல் ஆக்கப்பட்ட பல்லாயிரம் உறவுகளுக்கு
கண்ணீர் தவமியற்றும் தாய்குலங்களும் கைமை பூண்ட
இளம் விதவைகளும் அழுது புலம்பிட ஓயாத ஒப்பாரி
மனச்சாட்சி முள்ளாய் உறுத்திட நல்மனங்களிலே முகாரி

தாலாட்டி தூங்கவைத்த-இளந்தலைமுறையை ஒப்பாரியில்
விழிக்க வைக்க-ஓயாது முயலும் மூத்த தலைமுறையின்
சோகங்கள், கற்பினைக் காக்க -அக்கினியில்
சங்கமிக்கும் கன்னியரின் கற்பூரத் தீபாவளிகள்



ஆறுதல் சொல்லிய சொந்தங்களோ
அங்கங்கள் சிதறி மாண்டன
அன்பு உலாவிய இல்லங்களோ-தீயுண்டு
பேய்கள் உலாவிடச் சுடுகாடாய் மாறின



கைதிகளான அப்பாவிகளோ
பூசா, வெலிக்கடைச் சிறைகளில் வாடிட
குண்டுகள் துளைத்த உடலங்களோ
எரியும் டயர்களில் தகனப்பலியாயின

வங்கக் கடலும் சிந்திய குருதியால் சிவந்திட
பாக்கு நீரிணையும் எம்மவர் கண்ணீரால் கரித்திட
உலககெங்கும் புலம்பெயர்ந்த தமிழ் அகதிகள்
அநாதை, விதவைகளாய் மாறும் அப்பாவிகள்



விம்மி மனம்சோர, விழிகளில் கங்கை பாய
அம்மா என மனம் கதற-அழிந்த சொந்த பந்தம்
குண்டு வீச்சால் நொந்த ஆலயத்தில் -புகலிடம் தேடும்
அகதிகளாய் கர்ப்பிணி மனைவியோடு கணவன் என் பந்தம்

எம் உரிமை முழக்கங்கள் குரல் நெரிபட்டு ஓய்ந்திட-ஈழக் கனவு
குண்டுத் தீயில் கருகிட, அச்சம் ஒழிந்த உணர்வோடும், அடிபட்டு
நொருங்கிய இதயத்தோடும், செந்நீர்ச் சேற்றில் சுதந்திர வித்தாய்
எம்மவர் வித்துடல்களை விதைத்து, ஈழ விடுதலையின்
புதிய அறுவடைக்காய் நாம் காத்திருக்கின்றோம்.

எங்கோ தெரியும் விடிவுகால ஒளியில் என்னவள் கருப்பையில்
உயிராகித் துடிக்கும் எந்தன் சந்ததியெனும் நம்பிக்கை ஒளியோடு
இறந்தகாலமும், நிகழ்காலமும் இருளிற்கழிய, எதிர்கால ஒளி பார்த்து-
அது கருவாகி உருக்கொண்டு வரும் வழி பார்த்து, கரும் புகை மறைத்த
வானில் விழி நோக ஒளி தேடி விடிவுகால ஒளியெனும்
வசந்தத்தை நோக்கி நாம் மூவர் காத்திருக்கின்றோம்.

எமக்கெனத் தாய்நாடு உருவாகும் என்றோர் உள்ளத்துடிப்பில்
உயிர் காத்து, உருவான கரு காத்து, கரு வளரும் மனைகாத்து,
குண்டுவீச்சால் நொந்து நிற்கும் ஆலயத்தில் அகதிகளாய்
ஏக்கமோடும் எதிர்காலத் தலைமுறையின் தொடக்கமோடும்,
என்றோ உருவாகும் தாய்நாடெனும் வசந்தகாலத்தை நோக்கி
நாம் காத்திருக்கின்றோம்.

ஈழக்கனவினை எம் ஈரக்கருவிழிகள்
களிப்புறக் காணுமுன்-மூடித்துயிலுறுமோ
எம் உடல்தான் பேச்சடங்கி மூச்சடங்கி
பிணமாய் வாடித்துயருறுமோ?

யுத்தப் பறைகள் ஓய்ந்திட-இரத்த
ஆறுகள் வற்றிக் காய்ந்திட அமைதி மலரும்
திருநாளே அனைவருக்கும் சுதந்திரம்-
ஒன்றே குலம், உண்மையே தெய்வம் மந்திரம்

இருள் சூழ்ந்த எம் வாழ்வில்-புலிகளின்
ஈகைச் சுடர்கள் வழிகாட்டும் சூரியன்களோ?
சோகத் தீ மூட்டும் சொந்தங்களோ
காலமே நீ சொல்!

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-1977-2808-2023*

1. The Sri Lankan civil war took place from 1983 to 2009, primarily involving the Liberation Tigers of Tamil Eelam (LTTE) and the Sri Lankan government.
2. The conflict emerged due to the discrimination and violent persecution of Sri Lankan Tamils by the Sinhalese-dominated government.
3. The war resulted in over 100,000 civilian deaths and more than 50,000 fighters from both sides killed.
4. The LTTE aimed to create an independent Tamil state called Tamil Eelam in the north-east of Sri Lanka.
5. Major anti-Tamil pogroms occurred in 1956, 1958, 1977, 1981, and 1983, which fueled Tamil discontent and militant responses.
6. The LTTE employed extreme tactics, including suicide bombings and the use of child soldiers.
7. The Sri Lankan military declared victory over the LTTE in May 2009, concluding the decades-long conflict.

8. Following the war, there were numerous international calls for an independent investigation into alleged war crimes committed by both the Sri Lankan military and the LTTE.
9. The conflict displaced over a million people, leading to a significant humanitarian crisis.
10. The Lessons Learnt and Reconciliation Commission, established post-war, faced criticism for its lack of independence and inadequate investigation into war crimes.

---------------------------------------------------------------------------------------------------------

There are significant controversies surrounding the Sri Lankan civil war. These include:
1. **War Crimes and Human Rights Violations**: Both the Sri Lankan military and the Tamil Tigers (LTTE) were accused of committing war crimes, particularly during the final phases of the war in 2009. These alleged crimes include attacks on civilians and civilian structures, executions of combatants and prisoners, enforced disappearances, and acute shortages of food and medical supplies for civilians trapped in the war zone.

2. **Dispute Over Casualty Figures**: There are conflicting reports regarding the number of civilian casualties incurred during the war. Estimates of the civilian death toll range widely, with some reports claiming upwards of 40,000 civilian deaths in the final stages alone, while others, including the Sri Lankan government, suggest significantly lower figures.

3. **Reactions and Responses to Civilian Deaths**: Following the war, both local and international bodies have criticized the Sri Lankan government for its handling of the aftermath and for not adequately addressing human rights violations. Additionally, global protests from Tamil diaspora communities occurred, condemning the civilian casualties.

4. **Investigations and Accountability**: The Sri Lankan government's refusal to allow independent international inquiries into the alleged crimes has been a point of contention. Various organizations, including the United Nations, have called for transparent investigations, but the government's commissions, such as the Lessons Learnt and Reconciliation Commission, have faced criticism for their perceived lack of independence and thoroughness.
5. **Ongoing Political Implications**: The aftermath of the civil war continues to affect Sri Lanka's political landscape, with ongoing tensions between ethnic groups and debates over the need for reconciliation and transitional justice.

---------------------------------------------------------------------------------------------------------

One intriguing fact about the Sri Lankan civil war is that it involved not only the local military and the Liberation Tigers of Tamil Eelam (LTTE) but also international players, including the Indian Armed Forces, which intervened from 1987 to 1990 as part of the Indian Peace Keeping Force (IPKF) to maintain order during the conflict